# 66. குளத்தங்கரைக் கும்பல்

எதிரில் வந்தவர்கள் என்னுடன் வந்த ராகவனின் பதிலையும், தங்களுடன் கைது செய்து அழைத்துப் போய்விட்டார்கள். என்ன சொன்னார் ராகவன் என்பது தெரியவில்லை. அவரையே கேட்கலாம் என்றால் நான் சுற்றும் முற்றும் பார்க்கும்போது யாரையும் காணவில்லை.

முப்பது ஆண்டுகளுக்கு முன் நான் இந்தக் குளத்துக்கு வந்திருக்கிறேன். இப்படியா ஜனநெரிசலா இருக்கும் இந்த இடம்? குளத்தங்கரையில் நின்று குளத்தில் நீர் நிரம்பியிருப்பதைப் பார்க்க முடியுமே. இப்போது கத்தரிக்காய் (கிலோ மூன்று ரூபாய்), வெண்டைக்காய் (கிலோ நாலு ரூபாய்) இது என்ன மாசம்? வண்டி வண்டியாக முத்தல் முருங்கைக்காய் ரூபாய்க்குப் பன்னிரண்டுதான். காதிலும் கண்ணிலும் விழுகிறது.

காலி சைக்கிள் ரிக்ஷாக்கள்தான் எத்தனை? மியூஸிக் அலாரம் இசையுடன் தங்கள் மணிகளை அடித்துக்கொண்டு செல்கிறார்கள். காலி வண்டிகள்-அவனுக்கு எங்கேயோ அவசர வேலை இருக்கிறது. தமிழ்க் காவலர் சங்கம் கண்ட சைக்கிள் ரிக்ஷா. பாண்டியன் உபயம் வானளாவ கூவம் வாசனையை உயர்த்துகிறது. முன்பெல்லாம் போல இப்பவெல்லாம் கூவம் வாசனை, மனிதர், மாடு என்கிற ஸிம்பிள் வாசனையல்ல; ஒரு சிக்கலான ரசாயனக் கலவை-டீசல், மீன், மது, பூ, மாமிசம், பஞ்சமகாரங்கள், தொடர் வாரப் பத்திரிகைச் சேர்க்கைகள், வர்ணங்கள் எல்லாம்.

சென்னையில் பெருமைகள் எல்லையற்றவை. எல்லை மூலக்கொத்தளத்திலிருந்து தாம்பரம், முடிச்சூர், வண்டலூர் என்று செங்கற்பட்டை எட்டித்தொட முயன்று கொண்டிருக்கிறது. வட வெல்லை திருவேங்கடம்-ம.பொ.சி.யின் ஒரே தோல்வி.

இருநூறு ஆண்டுகளில், ஊர் மாறித்தான் போய்விட்டது. நவாபு காலத்தில் நொண்டி நாடகங்களில் நம்பிக்கை வைத்தார்கள்.

நவாபு குதிரைத் திருட்டுக்காக, மாறு கால், மாறு கை வாங்கி விடுவான். இஸ்லாமிய நீதியின் பிரதிநிதி அவன். நவாப் ராஜ்ஜிய அதிகாரத்துக்கு அப்பாலிருந்த திருச்செந்தூர் நாயகன் அலைகடலை நோக்கிய கண்களைத் திருப்பி-அக்கண்களுக்கு வயதால் காடராக்ட் வந்து கொண்டிருந்தது - மாறு கையையும் மாறு காலையும் முளைக்கச் செய்வான்-இது நொண்டி நாடக ஆரம்பம்.

இப்போது கபாலி கோபுரம் போதும் என உயரமாகத்தான் இருக்கிறது. மயிலாப்பூரில் மயில் எங்கேனும் கண்களில் படுகிறதோ-கோயிலில் கல்லாக இருக்கிறதோடு சரி.

மஸ்ஜித் மோடில் வீடுகள் கட்டப்பட்ட புதுசில் மயில்கள் தங்களுக்காகத்தான் கட்டியிருக்கிறார்கள் என்று, ஜன்னல் துருத்தல்களின் மேல் நின்று ஒன்றுக்கொன்று கூவி ஹிந்துஸ்தானி சங்கீதம் மாதிரி கூவி ஆடின. இசை விமரிசகர் அதுவும் ஆங்கிலத்தில் எழுதுபவர்-சுப்புடு என்று தமிழ்ப் பெயர்தான் - மயில்கள் ஓடிவிட்டன. நாங்கள் குடியேறிய போது ஒன்றிரண்டு மயில்கள் வந்து ஆடும். பாடும். எங்களுக்கு ரஸனை போதவில்லை என்றோ அல்லது அவற்றிற்கு ஆடியன்ஸ் ரெஸ்பான்ஸ் இல்லையென்றோ, அந்த இரண்டொரு மயில்களும் போய்விட்டன.

அவை மயிலாப்பூருக்கு வரவில்லை என்பது நிச்சயம். என்னைத் தொடர்ந்து வாலை ஆட்டிக் கொண்டுவர கூஃபியா என்ன அது?

மயிலாப்பூரில் காலம் நிதரிசனமாகக் காணக் கிடக்கிறது. குப்புசாமி அய்யர் 'நான் கபாலி சந்நிதியில் இருக்கிறேன்' என்பார். இப்போது இங்கிருப்பவர்கள் எல்லாம் கபாலிக்குக் குறுகல் பார்வை என்பதில் நிச்சயம் நம்பிக்கை உடையவர்கள். வியாபாரம் இந்தப் பகுதியில் பெருத்துவிட்டது. மடாதிபதிகள் ஊர்கூட்டிச் சோறுபோட்டது போக ஹோட்டல்கள் நடத்துகிறார்கள். பச்சடியை இலையில் எந்தப் பக்கத்தில் வைப்பது என்று தெரியாதவர்கள் பரிமாறுகிறார்கள்.

பம்பாயில் அகில இந்திய நாலாவது (மூன்றாவதோ?) இலக்கியாசிரியர்களின்? மாநாட்டுக்கு வந்திருந்த மௌனி தினமும் சிவப்பழமாக ஸ்நானம் செய்துவிட்டு, நெற்றியில் திருநீறுதுலங்க, கருத்தரங்குகளில் பிரசன்னமாக இருந்தார். வாயைத் திறக்காது

பங்கு கொள்வார். ஒரு இரவில் டாஜ் ஓட்டலில் விருந்து. எதுவும் யாராவது கொண்டு வந்தால் நான் Vegetarian என்று சொல்லிக் கொண்டே நானும் அவரும் பக்கத்தில் பக்கத்தில் உட்கார்ந்து சாப்பிட்டோம். ஒரு ஸெர்வர் "அப்பா.... சௌக்கியமா? அம்மா, பையன்கள் எல்லாம் சௌக்கியமா?" என்று கேட்டான். "யாருடா அது? கடவுள் குடும்பனா?" என்று கேட்ட மௌனி திரும்பி "என் ஜன்மம் சாபல்யமாகி விட்டது. அவன் என் மில்லில் வேலை பார்த்தவன்" என்றார்.

மௌனியின் பிள்ளைகள் எல்லோரும் சௌக்கியமாக இருந்த காலம் அது.

நான் உன் சிஷ்யனில்லை என்று எவனுக்குச் சொல்லத் தோன்றுகிறதோ, அவன்தான் முதல் சிஷ்யன். ஒருவனுக்குத்தான் குருவின் சோதனைகளை இஷ்டப்படி மாற்றியமைக்க உரிமையுண்டு. புத்தனுக்கு ஆனந்தன்; ஏசுவுக்குப் பீட்டர்; சங்கரருக்கு மணியானவன். இப்படியும் உலகம் நடக்கிறது. சாம்ராஜத் நிஷு¬க்கு ப்ரதீஷ் நந்தி.

டெல்லியில் முஸ்லீம்கள் ஆண்ட காலத்தில் பெரும் மொகல்கள் காலத்தில், கடைத் தெருவில் குறிப்பிட்ட நாட்களில் கோட்டைப் பெண்களைத் தவிர வேறு யாரும் நடமாட முடியாதாம். கோஷாப் பெண்கள் சந்திர விலாஸ கடைத்தெருவில் என்ன பொருட்கள் வாங்கினார்களோ தெரியாது. இன்று இங்கு கோஷாக்கள் இல்லை. தலையில் துணியைப் போட்டுக் கொண்டு தவறு செய்துவிட்டுக் காரியாலயத்திலிருந்து திரும்பி வருகிற ஆண்கள்தான் உண்டு. மாண்புமிகு டாக்டர் உக்கிரப் பெரும் புழுதிப் பாண்டியன் நீள் செழியனின் கதையை எடுத்தோதிப் பெரும் பெரும் பெயர் பெற்றான்-தமிழ் வளர்த்தான். கழுதைகள் எல்லாம் காவிய நாயகர்கள் ஆக முடியாதே!

வடக்கு உயருகிறது. தெற்கு தாழ்கிறது. முக்கியமாக தேச வரைபடங்களில் எப்போதுமே தெற்கு தாழ்த்தும், வடக்கு உயர்ந்தும் தான் இருக்கிறது. தெற்கை மேலே போட்டு, வடக்கைப் பணிய வைக்கும் காலம் எப்போது வருமோ தெரியவில்லை. இந்தியை எதிர்ப்பது மட்டும் போதாது; தமிழையும் உயர்த்த வேண்டும். நூற்றுக்கணக்கான டாக்டர் பட்டங்கள் தரப்பட வேண்டும். உலக கவியிடம் சொல்ல வேண்டியது தான் உலகத் தமிழ்ச் சங்கங்கள் (அல்லது தமிழ் உலகச் சங்கங்களா?) மேலும் மேலும் தோன்றிக்

கிளைக்க வேண்டும்.

கபாலி குளத்தில்கூட சங்கப் பலகை மிதக்க விடப்பட வேண்டும். இன்று வள்ளுவரைக் குளத்தில் தள்ளிவிட்டு ஞான சம்பந்த நூல்களைச் சங்கம் வென்ற நூல்களாகக் காணவேண்டும். சமுதாய உணர்வுள்ள சங்கங்களுக்குப் பரிசு தரவேண்டும்.

தெருவெல்லாம் பூசனிக்காய்ச் சிதறல்கள். தேங்காய் விலை அதிகமா? பூசனிக்காய் விலை அதிகமா? பெட்டியடிச் சுவர்க்கத்தில் புகுந்துவிட்டவர்கள் பதில் சொல்லமாட்டார்கள்.

வடக்கு மட்டும் உயர்ந்து விடவில்லை. மதிப்புகளும் தாழ்ந்து விட்டனவே. பெண்ணாக இருந்தால் மட்டும் போதாது- அழகும் வேண்டும். அழகு எங்கே என்று தேட லக்மே மாக்ஸ்ஃபாக்டர், எமாமி என்று பெயர்கள் மட்டும் இரவல். சரக்கு முழுக்கான இந்தியச் சரக்குதான். ப்ளாக் நைட் மாதிரி. கறுப்பு வீரர் அருந்தி மாலை வீரம் பெறுகிறார்கள்.

என்னய்யா வேடிக்கை என்று போலீஸ்காரன் கூட்டம் சேருவதைத் தடுக்கமுனைகிறான். தனியாகத்தான் நின்று நான் பார்க்கிறேன் என்று சொல்லிப் பயன் இல்லை. உன்னைப் பார்க்க நாலுபேர் நிற்கிறார்களே என்கிறான்.

கவிதை எழுதாத போலீஸ்காரன் அவன், பாலகுமாரனைப் படித்துக் கவிதை எழுத அறிந்துகொண்ட போலீஸ்காரனை டாங்க் மூலைக்கு என்று அனுப்பி நிறுத்தப் போகிறார்களோ தெரிய வில்லை.

சென்னையில் எந்த ஹோட்டலுக்குப் போனாலும் காபி நன்றாக இருந்த காலம் போய்விட்டது. எந்த ஹோட்டலிலும் காபி நன்றாக இராத காலம் இது. இனாமாகவே கிடைக்கிறது என்பதற்காக, புளியங்கொட்டைக் காபி சாப்பிடும் காலம் இது. டூத் ப்ரஷ் இனாமாகக் கிடைக்கிறது என்பதனால், பல்செட் கட்டிக்கொள்ளலாம். தோலா கீரை இனாமாகக் கிடைத்தால், பசுவை வீட்டுக்கு ஓட்டிக் கொள்ளலாம். அதைப் பற்றி நாவல் எழுதுபவர்கள் உண்டு.

சித்தாந்தங்கள் பலபல உண்டு கம்யூனிஸ்டு சித்தாந்தத்தையே காபிடலாக வைத்துக் கொண்டு காலங்கடத்திவிட முடியும் என்று

நிரூபணம் செய்யப்பட்டுவிட்ட காலம் இது. எல்லாச் சித்தாந்தங் களையும் இரவல் வாங்கலாம். நம்முது என்று சித்தாந்தத்தில் எதுவும் தேவையில்லை. உலகத்தில் சிந்தனைகளுக்கு வேலி வரம்புகள் கிடையாது.

குளத்துக்கு வேலி வரம்பு இருக்கிறது போய் விழுவது அப்படி ஒன்றும் சுலபமல்ல. தவிர குளத்தில் கணுக்கால் அளவுதான் தண்ணீர். சம்பமூர்த்திராயர் மொழியில் நீந்தித்தான் போக வேண்டும்.

●

ஞானரதம்
மே, *1986*